இதழ் 15 மலர் 226

NAVAMANI (Tamil) Daily, MADRAS

4 பக்கம் 25 காசு

Regd M No. 7897

Phone No. 76190 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 30-4-75 புதன் வெளியூர் 1-5-75 வியாழன்

லே ஆப் நஷ்டஈடு
பற்றி சாதிக்பாட்சா

3-ம் பக்கம்

## புரட்சிப் படையிடம்

# தென் வியட்நாம் அரசு சரணாகதி

## 20 வருட போர் நின்றது

சைகோன், ஏப். 30—அமெரிக்க ஆதரவு கொண்ட தெற்கு வியட்நாம் அரசு இன்று புரட்சிப் படைகளிடம் அடியோடு சரணகதி அடைந்தது. அதைத் தொடர்ந்து புரட்சிப் படைகள் வெற்றி ஊர்வலமாக சைகோன் நகருக்குள் நுழைந்தன.

"போர் நிறுத்தம் கிடையாது. எங்கள் நிபந்தனைகளை ஏற்று சரணகதி அடையவேண்டும் என்று புரட்சி அரசு திட்டவட்டமாக அறிவித்ததால், தெற்கு வியட்நாம் சரணகதி அடைகிறது" என்று தெற்கு வியட்நாமின் ஜனாதிபதி வான்மின் இன்று காலை ரேடியோ மூலம் அறிவித்தார்.

"பயன் இன்றி மேலும் ரத்தம் சிந்துவதைத் தடுக்க புரட்சி அரசிடம் அதிகாரத்தை ஒப்படைக்க நாங்கள் தயாராகக் காத்திருக்கிறோம்" என்று அவர் அறிவித்தார்.

"போரை நிறுத்துங்கள் அவரவர் ஆங்காங்கு அப்படியே இருங்கள்" என்று ஜனாதிபதி வானமின் தமது படைகளுக்கு உத்தரவிட்டார்.

அரசு சரணகதி அடைந்துவிட்டதால் மேற்கொண்டு போரிடவேண்டாம் என்று அவர் புரட்சிப் படையின் வீரர்களையும் கேட்டுக்கொண்டார்.

சரண் அடைவதைத் தவிர வேறு வழியே இல்லை என்று தெற்கு வியட்நாமிய அதிகாரிகள் ஒப்புக்கொண்டனர்.

20 வருட காலமாக உக்கிரமாக நடந்துவந்த வியட்நாம் போரில் கடந்த ஒரு மாத காலத்துக்குள்ளாக அடுத்தடுத்து பெரிய பெரிய நகரங்கள் புரட்சிப் படைகள் வசமாகின. தெற்கு வியட்நாமின் பெரும் பகுதி புரட்சிப் படைகள் வசமாகின. சைகோன் நகரம் மட்டுமே பாக்கி நின்றது. வடக்கு வியட்நாமியப் படைகளைச் சேர்ந்த 2 லட்சத்து 50 ஆயிரம் வீரர்கள் சைகோனை சூழ்ந்தனர். சைகோன் நகரிலோ தெற்கு வியட்நாமிய அரசுக்கு 20 ஆயிரம் துருப்புகள்கூட இல்லை. கடந்த இரு நாட்களில் நகரின் சில பகுதிகள் புரட்சிப் படைகள் வசமாயின.

இனி ஒன்றும் செய்ய முடியாது என்ற நிலையில் போரை எப்படியாவது நிறுத்தி உடன்பாடு காண தெற்கு வியட்நாமில் கடந்த சுமார் 10 தினங்களுக்குள்ளாக அடுத்தடுத்து ஜனாதிபதிகள் மாறினர். புரட்சி படைகளுடன் சமரசம் காணக்கூடியவர் என்று நம்பப்பட்ட வான்மின் கடந்த 27-ந்தேதி ஜனாதிபதியானார்.

"போரை நிறுத்தி சமரசப் பேச்சு நடத்தலாம்" என்று நேற்று அவர் புரட்சி அரசுக்கு வேண்டுகோள் விடுத்தார்.

ஜனாதிபதி வான்மின்னின் கோரிக்கைக்குப் புரட்சி அரசு ஒப்புக்கொண்டு போர் நிறுத்த உடன்பாடு ஏற்பட்டுவிட்டதாகவும் முன்னர் வந்த தகவல்கள் கூறின. (இச் செய்தி விவரம் 3-ம் பக்கம் பார்க்க) ஆனால் இக்கோரிக்கையை அரசு நிராகரித்தது.

"அமெரிக்கர் வாபசாக வேண்டும், சைகோன் அரசு ஒழியவேண்டும். சைகோன் அரசின் படைகள் கலைக்கப்படவேண்டும். தெற்கு வியட்நாம் அரசு சரணகதி அடையவேண்டும்" என்று புரட்சி அரசு திட்டவட்டமாக அறிவித்தது.

எனவே வேறு வழியின்றி இன்று காலை தெற்கு வியட்நாம் அரசு சரணகதி அடைந்தது.

## பரிசுச்சீட்டு குலுக்கல் முடிவுகள்

சென்னை, ஏப் 30—தமிழ்நாடு பரிசுச் சீட்டுக் குலுக்கல் இன்று நடைபெற்றது.

### M. G. வரிசை

முதல் பரிசு ரூ. 1 லட்சம்
256710
ஆறுதல் பரிசு ரூ. 1000
356709 256711
2வது பரிசு ரூ. 10 ஆயிரம்
438323 716829
ஆறுதல் பரிசு ரூ. 500
438322 438324 716828
716830

### M. H. வரிசை

முதல் பரிசு ரூ. 1 லட்சம்
072997
ஆறுதல் பரிசு ரூ. 1000
072996 072998
2-வது பரிசு ரூ. 10 ஆயிரம்
909790 923865
ஆறுதல் பரிசு ரூ. 500
909789 909791 923864
923866

## கோவையில் பலத்த மழை

கோவை, ஏப். 30—கோவையில் நேற்று பலத்த மழை பெய்தது. நேற்றுமாலை 2 மணி நேரத்துக்கு இது நீடித்தது. இன்று காலையிலும் லேசான மழை பெய்தது.

நீலகிரி மாவட்டத்திலும் நல்ல மழை பெய்தது.

### சென்னையில்

சென்னையில் இன்று காலையிலிருந்து வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. மழை பெய்யலாம் என்று வானிலை அறிக்கை தெரிவித்தது.

## 20 கோடி 1 ரூபாய் நாணயம்

புதுடெல்லி, ஏப். 30—20 கோடி ரூபாய் நாணயங்களைத் தயாரிக்க மத்திய அரசு தீர்மானித்திருக்கிறது.

1 ரூபாய் நோட்டுகளின் தேவை அதிகமாகியிருப்பதை முன்னிட்டு இந்த முடிவை எடுத்திருப்பதாக துணை நிதி அமைச்சர் பிரதாப் முகர்ஜி ராஜ்ய சபையில் தெரிவித்தார்.

## சென்னை நகருக்கு செயற்கை மழை: நிபுணர்கள் சிபாரிசு

புதுடெல்லி, ஏப். 30—சென்னையில் தண்ணீர்ப் பிரச்சினையைத் தீர்க்க செயற்கை மழையை பெய்விக்கலாம் என்று நிபுணர்கள் கருத்து தெரிவித்திருக்கின்றனர்.

செயற்கை மழையை உண்டாக்குவதில் ரஷ்யாவும் அமெரிக்காவும் திறமை பெற்றிருக்கின்றன. புளோரிடா மாநிலத்தில் செயற்கை மழை முயற்சி வெற்றி பெற்றிருக்கின்றது.

சென்னையிலும் இது சாத்தியமே என்று நிபுணர்கள் கருதுகிறார்கள்.

## ஜனாதிபதி இந்தோனேஷியா பயணம்

புதுடெல்லி, ஏப். 30—இந்திய ஜனாதிபதி பக்ருதீன் அலி அகமது மே மாதம் இந்தோனேஷியாவில் ஒருவாரம் சுற்றுப் பயணம் செய்வார். அவரோடு அவரது மனைவியும் செல்கிறார். மே மாதம் 4-ம் தேதி புதுடெல்லியிலிருந்து ஜனாதிபதி புறப்படுகிறார்.

## தெற்கு வியட்நாம் சரணகதி: ராஜ்யசபையில் மகிழ்ச்சி

புதுடெல்லி, ஏப். 30—தெற்கு வியட்நாம் அரசு சரணகதி அடைந்த செய்தியை ராஜ்ய சபை உறுப்பினர்கள் மேஜையைத் தட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்து வரவேற்றனர்.

வியட்நாமில் தேசிய விடுதலைப் படை வெற்றிபெற்றுள்ளதை ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போரிடும் அனைவரும் வரவேற்பர். இந்த வெற்றி உலகுக்கே வெற்றியாகும் என்று கம்யூனிஸ்டு உறுப்பினர் பூபேஷ்குப்தா கூறினர்.

## ரூ. 18 லட்சம் கடத்தல் கெடிகாரங்கள் பிடிபட்டன

பெங்களூர், ஏப். 30—கர்நாடகாவில் கடந்த மார்ச் மாதத்தில் ரூ. 17,92,200 பெறுமான கடத்தல் பண்டங்கள் கைப்பற்றப்பட்டன. இவற்றில் பெரும் பங்கு வெளிநாட்டு கெடிகாரங்கள்.

## தமிழ்நாடு புது காங்கிரஸ் செயற்குழு கூட்டம்

சென்னை, ஏப். 30—தமிழ்நாடு புது காங்கிரஸ் செயற்குழு கூட்டம் இன்று காலை சென்னையில் ஆரம்பமாயிற்று. கட்சி தலைவர் கே. எஸ். ராமசாமி தலைமை வகித்தார்.

மத்திய மந்திரி சி. சுப்பிரமண்யம் இந்தக் கூட்டத்திற்கு வரவில்லை.

சென்னை குடிநீர் பஞ்சம் உள்பட பல்வேறு விஷயங்கள் பற்றி இந்தக் கூட்டத்தில் விவாதிக்கப்படும்.

உழைக்கும் வர்க்கத்தின் உணர்வுகள் வெற்றி காணும் என்பதை மேதினி போற்றும் மே தினமும், உழைப்பாளர் சிலையும் உலகுக்கு நினைவூட்டுகின்றன.

## மேதினம் பொன்னாள்!

கவிஞர் பூவை. செங்குட்டுவன்

உதிக்கின்ற சூரியன்
மறைந்தாலும் ஓயாது
உழைக்கின்ற மனிதன் இங்கே!—அவன்
உழைக்கின்ற உழைப்புக்கு
ஊதியம் கிடைப்பினும்
ஓய்வுக்கு நேரம் எங்கே?—என்று
மேதினி கேட்ட நன்னாள்!—அதுவே
மேதினம் என்ற பொன்னாள்!

சிந்திடும் வியர்வையின்
துளிகளைக் குருதியாய்த்
தந்திடும் வர்க்கம் இங்கே!—அவர்
சிந்தையில் ஆயிரம்
தொல்லையும் துயரமும்
சூழ்ந்திடில் நீதி எங்கே?—என்று
மேதினி கேட்ட நன்னாள்—அதுவே
மேதினம் என்ற பொன்னாள்!

காட்டையும் மேட்டையும்
கழனியாய் மாற்றியே
காட்டுவோர் ஆற்றல் இங்கே!—அவர்
வீட்டிலே தரித்திரம்
தாண்டவம் ஆடினால்
நாட்டிலே நேர்மை எங்கே—என்று
மேதினி கேட்ட நன்னாள்—அதுவே
மேதினம் என்ற பொன்னாள்!

## மே தினம் பார்லிமெண்ட் விடுமுறை

புதுடெல்லி, ஏப். 30—மே தினத்தை முன்னிட்டு நாளை பார்லிமெண்டின் இரு சபைகளுக்கும் விடுமுறை. ஆனால், அரசாங்க அலுவலகங்கள் திறந்திருக்கும்.

## மே தினம்: ஏ.ஐ.டி.யூ.சி. தொழிலாளர்-பேரணி

சென்னை, ஏப். 30—ஏ. ஐ. டி. யூ. சி. நகர தொழிற்சங்கங்களின் சார்பில் நாளை மாலை மே தினத்தை முன்னிட்டு பேரணி ஒன்றை நடத்துகின்றனர்.

நாளை மதியம் 2 மணிக்கு ஹார்பர் மெயின் கேட்டிலிருந்தும், மூர்மார்க்கெட் வி. பி. ஹால் அருகிலிருந்தும் ஊர்வலங்கள் புறப்படுகின்றன.

மாலை 6 மணிக்கு தண்டையார்பேட்டை ஜீவா சிலை அருகில் மே தின விழா பொதுக் கூட்டம் நடக்கிறது.

## 2-ந் தேதி சட்டசபைக் கூட்டம்

சென்னை, ஏப். 30—தமிழக சட்டசபையும், மேலவையும் இம்மாதம் 2-ம் தேதி வெள்ளிக்கிழமையன்று அவசரமாகக் கூடுகிறது.

சிக்கிமை இந்தியாவில் 22-வது மாநிலமாக ஆக்க வகை செய்யும் மசோதாவுக்கு அங்கீகாரம் அளிப்பதற்காக கூட்டப்பட்டு இருக்கிறது.

வெள்ளிக்கிழமை காலை 10 மணிக்கு சட்டசபையும், அன்று 4 மணிக்கு மேலவையும் கூடும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

### விடுமுறை அறிவிப்பு

மே தினத்தை முன்னிட்டு, மே 1-ந் தேதி நவமணி அலுவலகத்துக்கு விடுமுறை. ஆகவே நவமணியின் அடுத்த இதழ் சென்னையில் 2-ந்தேதி மாலையிலும், வெளியூர்களில் 3-ந்தேதியன்றும் கிடைக்கும்.

## ஜேப்படி செய்தவரை பிடித்த தாசில்தாருக்கு கத்திக்குத்து

கோவை, ஏப். 30—ஜேப்படி செய்தவரைப் பிடிக்கப் போன தாசில்தார் கத்தியால் குத்தப்பட்டார். குத்திய ஜேப்படிக்காரரைப் பொது மக்கள் சேர்ந்துப் பிடித்து போலீசில் ஒப்படைத்தனர்.

நேற்றிரவு 7-30 மணிக்கு இந்தச் சம்பவம் நடந்தது.

திருச்சி மாவட்டத்தில் தாசில்தாராக இருந்து வருகிறார் மகாலிங்கம். விடுமுறையைக் கழிக்க கோவைக்கு குடும்பத்துடன் வந்திருக்கிறார்.

நேற்று காந்திபுரத்தில் சென்று கொண்டிருந்தபோது ஒருவர் தம்மை உரசிக் கொண்டு போவதை உணர்ந்தார். உடனே சட்டைப் பையை பார்த்தபோது பணம் காணவில்லை. பணம் ஜேப்படி செய்யப்பட்டது தெரியவந்ததும், உரசிக் கொண்டு சென்றவரை தாவிப்பிடித்தார். உரசிக் கொண்டு சென்றவர் கத்தியை எடுத்து மகாலிங்கத்தின் கையிலும் தோள்பட்டையிலும் குத்தினர்.

இதைப் பார்த்த சாதாரண உடையில் இருந்த போலீஸ்காரர் ராமலிங்கம் குத்தியவரைப் பிடிக்க முயன்றார். ராமலிங்கத்தையும் கத்தியால் மாறி மாறிக் குத்தினர். ஆனாலும் ராமலிங்கம் ஜேப்படிக்காரரை விடவில்லை.

அதற்குள் பொதுமக்கள் சேர்ந்து ஜேப்படி செய்தவரைப் பிடித்துப் போலீசில் ஒப்படைத்தனர்.

ஜேப்படி செய்தவர் பெயர் முருகேசன். பேருரைச் சேர்ந்தவர் என்று கூறப்படுகிறது.

கத்திக்குத்துபட்ட மகாலிங்கமும், ராமலிங்கமும் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருக்கின்றனர்.

## காமன்வெல்த் மாநாட்டில் இந்திரா பேச்சு

கிங்ஸ்டன், ஏப். 30—வளர்ச்சி அடைந்த நாடுகளுக்கும் வளரும் நாடுகளுக்கும் இடையே உள்ள ஏற்றத்தாழ்வு அகற்றப்படவேண்டும் என்று பிரதமர் இந்திரா கூறினர்.

ஜமைக்கா தலைநகரான கிங்ஸ்டனில் நடைபெறும் காமன்வெல்த் மாநாட்டில் நேற்று இவ்வாறு கூறினர்.

## கவர்னர் கடிதத்திற்கு அரசாங்க பதில் கிடைக்க 8 மாதம்

பாண்டிச்சேரி, ஏப். 30—அரசு அலுவலகம் ஒன்றுக்கு பாண்டிச்சேரி லெப்டினண்ட் கவர்னர் எழுதிய கடிதத்திற்கு 8 மாதம் கழித்து பதில் கிடைத்தது.

இந்தத் தகவலை பாண்டிச்சேரி அரசு தலைமை செயலாளர் நேற்று நிருபர்களிடம் தெரிவித்தார். சம்பந்தப்பட்ட அரசு அதிகாரிகள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் அவர் கூறினர்.

கவர்னரின் கடிதத்திற்கு பதில் அனுப்ப தாமதமானால் சம்பந்தப்பட்ட அரசுத்துறை அதிகாரிகள்மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்று பாண்டிச்சேரி அரசு தலைமைச் செயலாளர் சந்திரமௌலி கூறினர்.

# 'ரோகிணி'செயற்கைகோள்: வானில் செலுத்த ராக்கெட் தளம் தயாராகிறது

**சென்னை, ஏப். 30—"ரோகிணி" என்னும் பெயர் கொண்ட செயற்கைக்கோளை வானில் பறக்க விடுவதற்கு சென்னை அருகே ஸ்ரீஹரி கோட்டாவில் ராக்கெட் தளம் தயாராகிவருகிறது.**

"இதற்கான வேலைகள் இன்னும் 18 மாதத்தில் முடிந்துவிடும்.

இத்தகவலை இந்திய வானவெளிக் கமிஷனின் தலைவரான தவானும், செயற்கைக்கோள் திட்ட டைரக்டர் யு. ஆர். ராவும் தெரிவித்தனர்.

ரோகிணி செயற்கைகோள் 1978ம் ஆண்டில் ஸ்ரீ ஹரிகோட்டாவிலிருந்து வானில் செலுத்தப்படும்.

இந்தியா ஏற்கெனவே "ஆர்யபட்டா" என்னும் பெயர்கொண்ட செயற்கைகோளை வானில் செலுத்தியுள்ளது தெரிந்ததே. அச் செயற்கைக்கோள் ரஷியாவில் மாஸ்கோ அருகே உள்ள வானவெளி நிலையத்திலிருந்து பறக்க விடப்பட்டது. இந்தியாவிடம் இதற்குத் தகுந்த ராக்கெட்இல்லாதத்தே இதற்குக் காரணம்.

இதேபோல அடுத்து இன்னும் சுமார் 6 மாதத்தில் "ஆர்யபட்டா—2" என்னும் பெயரில் இன்னொரு செயற்கைக்கோளை இந்தியா ரஷிய ராக்கெட்மூலம் வானவெளியில் பறக்கவிடும்.

இதையடுத்து இந்தியா ரஷிய ராக்கெட்டைப் பயன்படுத்தி மேலும் செயற்கைகோள்களை பறக்கவிடுமா என்று கேட்டதற்கு தவான் பதிலளிக்கையில் "ரஷிய ராக்கெட்டைப் பயன்படுத்தி இந்தியா மொத்தம் 2 செயற்கைக் கோள்களைத் தான் பறக்கவிடும். அதன் பிறகு 1978ல் இந்தியா தனது சொந்த ராக்கெட்டைப் பயன்படுத்தி தனது மூன்ருவது செயற்கை கோளைப் பறக்கவிடும் "என்ருர்.

ஸ்ரீஹரிகோட்டாவில் நிருபர்களிடையே பேசுகையில் அவர் இவ்வாறு கூறினர்.

"செயற்கைக் கோளைப் பறக்கவிடுவதற்காக இந்தியா தயாரிக்கும் ராக்கெட் 4 அடுக்குக் கொண்டதாக இருக்கும். அடுத்த ஆண்டுக் கடைசியிலிருந்து இந்த ராக்கெட் சோதனைகள் ஆரம்பமாகும், ஒவ்வொரு ராக்கெட்டையும் தனித்தனியே சோதிப்போம். பிறகு 4 அடுக்கு ராக்கெட்டுகளும் ஒன்ருக இணைக்கப்பட்டு செயற்கைக்கோள் வானில் செலுத்தப்படும். இந்த 4 அடுக்கு ராக்கெட் மூலம் செலுத்தப்படும் செயற்கைக் கோளுக்கு "ரோகிணி" என்று பெயர் வைக்கப்படும். அந்த செயற்கைக்கோள் 40 கிலோ எடை கொண்டதாக இருக்கும்" என்று தவான் கூறினர்.

"ரோகிணி செயற்கைக் கோள் வானில் சுமார் 400 கிலோ மீட்டர் உயரத்தில் பறக்கவிடப்படும்" என்றும் அவர் சொன்னர்.

## ராக்கெட் சோதனை

ஸ்ரீஹரிகோட்டா திட்ட என்ஜினீயர் ஒய். ஜே. ராவ் கூறுகையில் இந்தியா சொந்த ராக்கெட்டைப் பயன்படுத்தி 1978-ல் ரோகிணி" செயற்கை கோளைப் பறக்க விடுவதற்கான ஏற்பாடுகள் இன்னும் 18 மாதங்களில் முடிவடைந்துவிடும் என்ருர்.

ஸ்ரீஹரிகோட்டாவில் ஏற்கெனவே உள்ள ராக்கெட் தளத்தில் இருந்து இதுவரை 23 ராக்கெட்டுகள் வானில் செலுத்தி சோதிக்கப்பட்டுள்ளன என்றும் இவை அனைத்தும் 2 அடுக்கு ராக்கெட்டுகளே என்றும் அவர் சொன்னர்.

அடுத்த ஆண்டுக் கடைசிவாக்கிலிருந்து "ரோகிணி" செயற்கை கோளை செலுத்துவதற்கான ராக்கெட் சோதனைகள் துவங்கும்" என்றும் அவர் கூறினர்.

முன்னதாகதவான் பேசுகையில் இந்தியா இப்போது பறக்கவிட்டுள்ள 'ஆரியபட்டா" செயற்கைகோள் பற்றிவிவரித்தார்நேற்றுகாலை 9-23 வரை அது 148தடவை பூமியைச் சுற்றியுள்ளதாகவும். வானில் அது சுற்றிய தூரம் 60 லட்சம் கிலோமீட்டர்என்றும் அவர் கூறினர்

அதில் உள்ள எல்லா கருவிகளும் நன்கு செயல்பட்டு வருவதாக தவான் தெரிவித்தார். 'ஆரியபட்டா' அனுப்பிய தகவல்கள் அடங்கிய காகிதங்களை அடுக்கி வைத்தால் அது மொத்தம் 5 அடி உயரம் இருக்கும் என்ருர் அவர்.

"ஆரியபட்டா" அனுப்பிய தகவல்களை பூர்வாங்கமாக ஆராயவே3வாரகாலம்ஆகும் ஆராய்வு வேலை முற்றிலுமாக முடிய 2 மாதங்கள் பிடிக்கும்.

## ஆபத்து ஏற்படுமா?

வானவெளியிலிருந்துவிழும் விண்கற்கள் ஆரியபட்டாமீது மோதி அதனல் அச்செயற்கை கோளுக்கு தீங்கு நேரக் கூடிய வாய்ப்பு மிக அற்பமே என்ருர் அவர்.

அப்படி ஏதாவது விண் துகள்மோதி ஒரு பகுதி செயலற்றுப் போனுலும் அதன வேலையை மேற்கொள்ள ஒவ்வொரு பகுதிக்கும் மாற்றுப் பகுதி வைக்கப்பட்டுள்ளதாக யு. ஆர். ராவ் விளக்கினர்.

## உத்தரவு ஏன் இல்லை?

"ஆரியபட்டா" நன்ருக செயல்பட்டு வருகிறது, என்று ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் தவான் கூறினர்,

"ஆரியபட்டா"வுக்கு புதிதாக ஏன் உத்தரவு எதுவும் அனுப்பப்படவில்லை என்பதற்கு அவர்காரணம்கூறினர்.

முதலாவதாக அது நன்கு செயல்பட்டுவருகிறது. குறிப்பிட்ட பணிக்காகத்தான் உத்தரவு அனுப்புவோம். ஏற்கெனவே அது அனுப்பிய தகவல்களை பகுத்தாராய்ந்த பிறகு மீண்டும் உத்தரவுகளை அனுப்புவோம்" என்று தவான் சொன்னர்.

"ஆரியபட்டாவில் கோளாறு ஏதேனும் ஏற்பட்டதா?" என்ற கேள்விக்கு தவான் பதிலளிக்கையில் 'புதிதாக கார் வாங்கினல் அதில் சிற்சில கோளாறுகள் தென்படுவதுபோல சில பிரச்னைகள் ஏற்பட்டன. எனினும் அவை சமாளிக்கப்பட்டு விட்டன" என்று தவான் விளக்கினர்.

அடுத்து விடப்படும் மற்றொருஆரியபட்டா செயற்கை கோள் இந்தியாவில் நிலத்துக்கு அடியில் உள்ள கனிவளங்களைக் கண்டுபிடிக்கும் நோக்கம் கொண்டதாக இருக்கும் என்றும் அவர் தெரிவித்தார்.

ஆரியபட்டா செயற்கை கோள் திட்டத்துக்கு தபால் தந்தி இலாகா உட்பட பல்வேறு அமைப்புகள் சிறப்பான ஒத்துழைப்பு அளித்துள்ளதாக அவர் பாராட்டினர்.

சென்னையிலிருந்து சுமார் 60 மைலில் ஆந்திராவில் கடற்கரை ஓரமாக சுமார் 32 ஆயிரம் ஏக்கர் பரபரப்பில் அமைந்துள்ள ஸ்ரீஹரி கோட்டா ராக்கெட் தளத்தின் பல்வேறு பகுதிகளும் நிருபர்களுக்கு சுற்றிக் காட்டப்பட்டன.

# சென்னை நகருக்கு ஒரு மாதத்திற்குள் திருவான்மியூர் தண்ணீர்

**சென்னை, ஏப். 30—சென்னை நகர குடிநீர் தட்டுப்பாட்டைத் தவிர்க்க திருவான்மியூர் அருகே உள்ள முட்டுக்காடு பகுதியில் கிணறுகளிலிருந்து 10 லட்சம் காலன் குடிநீர் மே மாத இறுதியிலிருந்து கிடைக்கும்.**

இந்தப் பத்து லட்சம் காலன் தண்ணீரும் வீராணம் திட்டத்திற்காகப் போடப்பட்டுள்ள குழாய்கள் மூலம் சென்னை நகருக்கு வரும்.

முத்துக்காட்டில் இருந்து கிணற்றுத் தண்ணீர் பம்ப் செய்யப்பட்டு நந்தனம் வழியாக சூரிய நாராயண ரோடில் உள்ள தண்ணீர் தொட்டிக்குக் கொண்டு வரப்பட்டு அங்கிருந்து விநியோகம் செய்யப்படும்.

இந்த தகவல்களை குடிநீர் வாரிய நிர்வாக இயக்குநர் வெங்கட்ராமன் பத்திரிகை நிருபர்களிடம் தெரிவித்தார்.

இந்த வேலை மே இறுதிக்குள் முடியும் வகையில் துரிதமாக நடந்து வருகிறது என்றும் அவர் தெரிவித்தார்.

சென்னை நகருக்கு தண்ணீர் கொண்டுவரும் பாலாறு திட்டம் செப்டம்பர்மாத இறுதிக்குள் முடிவடையும் என்று அவர் நம்பிக்கை தெரிவித்தார்.

## செப்டம்பரில் முடியும்

இதுபற்றி வெங்கட்ராமன் மேலும் கூறியதாவது:

பாலாறு திட்டத்திற்கு 59 கிலோ மீட்டர் தூரம் குழாய்கள் பொறுத்தப்படும் வேலை நடந்து வருகிறது.

இந்த வேலை செப்டம்பரில் முடிந்து சென்னை நகருக்கு தண்ணீர் கொண்டுவரப்படும்.

இத்திட்டத்தின் மூலம் கல்பாக்கம், மகாபலிபுரம், திருக்கழுக்குன்றம், மறைமலை அடிகள் நகர் ஆகிய பகுதிகளுக்கும் குடிநீர வழங்க திட்டமிடப்பட்டிருக்கிறது என்றும் வெங்கட்ராமன் தெரிவித்தார்.

# எக்ஸ்பிரஸ் ரெயில்களில் சர்சார்ஜ் வாபசாகும்

புதுடெல்லி, ஏப், 30—பெரிய நகரங்களுக்கு இடையே ஓடும் 'அதிவேக' ரெயில்களில், ரெயில் கட்டணத்திற்கு விதிக்கப்படும் 'சர்சார்ஜ்' விரைவில் வாபஸ் பெறப்படும் என்று தெரிகிறது.

ரெயில்வே அமைச்சகத்துக்கான பார்லிமெண்ட் ஆலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் மெம்பர்களின்வற்புறுத்தலின் பேரில் ரெயில்வே மந்திரி கமலபதி திரிபாதி இவ்வாறு உறுதி அளித்ததாகக் கூறப்படுகிறது.

ரெயில்வேயில் கூடிய அளவு தினக்கூலி தொழிலாளர்களும் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுவார்கள் என்றும் அவர் உறுதி கூறினர். கடந்த 2 ஆண்டுகளில் மட்டும், 17 ஆயிரம் தினக்கூலி ஊழியர்கள் வேலைக்கு வைக்கப்பட்டதாக அவர் கூறினர்.

முதலமைச்சர் திட்டம்

# தமிழக வறட்சி நிவாரண நிதி ரூ. 1·75 கோடி சேர்ந்தது

சென்னை, ஏப். 30—நேற்று முன்தினம் வரை தமிழ்நாடு வறட்சி நிவாரண நிதிக்கு ரூ. 1·75 கோடி வசூலாகியுள்ளதுஎன்றுமுதலமைச்சர்கருணாநிதி அறிவித்தார், அரசு பஸ் போக்குவரத்து கார்ப்பரேஷன்கள், தனியார்பஸ், லாரி சொந்தக்காரர்கள் சார்பில் வறட்சி நிவாரண நிதிக்கு முதல்வரிடம் ரூ 48 லட்சம் நிதியளிக்கப்பட்டது. போக்குவரத்து துறை மூலம் மட்டிலும் ரூ. 1 கோடி நிதி வசூலாகும் என்று தாம் நம்பிக்கை கொணடுள்ளதாக முதல்வர் கூறினர்.

மழை பெய்யாது ஏற்பட்டுள்ள தற்போதைய வறட்சி நிலைமையைச் சமாளிக்க அரசுடன், பொது மக்கள் ஒத்துழைக்க வேண்டும் என்று முதல்வர் கேட்டுக் கொண்டார். இந்த விழாவுக்கு போக்குவரத்து அமைச்சர் எஸ். ராமச்சந்திரன் தலைமை வகித்தார், பஸ் லாரி அதிபர்கள் இதுவரை ரூ 32,68 லட்சமும் அரசு பஸ் போக்குவரத்து கார்ப்பரேஷன்கள் ரூ. 15.36 லட்சமும் வழங்கியுள்ளதாக இவர் கூறினர்.

போக்குவரத்து இலாகா காரியதரிசி ஜே. எஸ். பாங்கோ, பல்லவா போக்குவரத்து கழக நிர்வாக டைரக்டர் தில்லைநாயகம் ஆகியோர் வரவேற்று பேசினர். தமிழ்நாடு பஸ் முதலாளிகள்சம்மேளனத் தலைவா எஸ். சின்னசாமி, லாரி அதிபர்கள் சங்க காரியதரிசி எஸ். சி. வி. கோபால் ஆகியோர் பேசினர்.

# கந்தப்பன் பதவி காலம் நீடிப்பு

சென்னை, ஏப். 30—தமிழ் நாடு குடிநீர் வடிகால் வாரிய தலைவர் கந்தப்பனின் பதவிக் காலம் இந்த மாதம் 14-ம் தேதியிலிருந்து மேலும் ஒரு ஆண்டுக் காலம் நீடிக்கப்பட்டிருப்பதாக அரசாங்கம் அறிவித்துள்ளது.

## சுப்பையா பதவி நீடிப்பு

முன்னள் அமைச்சர் கே. வி. சுப்பையா, தமிழ்நாடு விவசாயத் தொழில் வளர்ச்சிக் கழகத்தின் தலைவராக 7-4-75-லிருந்து மீண்டும் ஒரு ஆண்டு காலம் நீடிப்பார் என்றும் அரசு அறிவித்துள்ளது.

# சிமெண்ட் கட்டுப்பாடுகள் ரத்து

புதுடெல்லி, ஏப். 30—கட்டிட வேலைகளுக்கானசிமெண்ட் உபயோகத்துக்கு சென்ற வருஷம் விதிக்கப் பட்டிருந்த எல்லா கட்டுப்பாடுகளும் மே 1ந் தேதியிலிருந்து நீக்கப்படும் என்று மத்திய தொழில் மந்திரி டி. ஏ. பை நேற்று மக்கள்சபையில் அறிவித்தார்.

7-ம் பக்கத் தொடர்ச்சி

களாக வரவே இல்லை. சட்டமன்றம் செத்துப்போய் விட்டது என்றுசொன்னவர் அவருடையகட்சியைசார்ந்தமற்ற சட்டமன்ற உறுப்பினர்களை மட்டும் ஏன் செத்துப்போன சட்ட சபைக்கு அனுப்பி வைக்கவேண்டும்? சட்டசபை செத்துப்போய்விட்டதுஎன்று சொல்லுகிறவர் வராண்டாவில் மட்டும் வந்து அங்கு வைக்கப்பட்டிருக்கிற புத்தகத்தில் கையெழுத்து மட்டும் போட்டுவிட்டுப் போய்விடலாமா? சட்டசபைக்கு வராமல் இருப்பது ஒரு கட்சியின் தலைவருக்கு அழகா? மாநில சுயாட்சி தராவிட்டால், ராணுவத்தைச் சந்திக்கவும் தயாரென்றுமுழங்கினவர் இப்பொழுதுஏன் மாநில சுயாட்சி பிரச்சினையில் ஓடி ஒளியவேண்டும்? இவ்வாறு அமைச்சர் நெடுஞ்செழியன் பேசினர்.

# ஊழலுக்குத்துணைபோகும் கம்யூனிஸ்டுகள்: காமராஜ் பேச்சு

**ஆம்பூர், ஏப். 30—ஊழலுக்குத் துணைபோகிறவர்கள் கமயூனிஸ்டுகள் என்று காமராஜ் கூறினா.**

ஆம்பூரில் பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜருக்கு ஆம்பூர் சர்க்கரை ஆலை தொழிலாளர்கள் வரவேற்பு கொடுத்தனர்.

வரவேற்புக்குப் பதிலளித்துப் பேசுகையில் காமராஜ் பேசியதாவது:—

இன்று மத்திய மாநில அரசுகள் தங்களை சோஷலிச அரசு என்று கூறிக்கொள்கின்றன.

நமது மாநில அரசு கம்யூனிஸ்டுகளைவிட நாங்கள் தீவிரவாதிகள், இது பாட்டாளி அரசு என்று கூறிக்கொள்கிறது,

## நானே பாராட்டுவேன்

உண்மையாகவே ஏழை மக்களுக்கு — பாட்டாளிகளுக்கு நன்மை செய்யும் அரசாக இருந்தால் நான்தான் முதலில் பாராட்டுவேன்,

உண்மையாகவே இவைகள் சோஷலசஅரசாக பாட்டாளி அரசாக இருந்தால் பாட்டாளிகளும் ஏழை மக்களும் ஏன் இனறு இத்தனை கஷ்டப்படவேண்டும்?

இவர்கள் பேசும் சோஷலிசம்பேச்சசாடு சுரி—வெறும் ஏமாற்ருக இருக்கிறது.

தொழிலாளர்களுக்கு வெறும் கூலியை மட்டும் உயர்த்தி கொடுத்துவிட்டால் போதாது.

15 ரூபாய் கூலி என்று கொடுத்துவிட்டு அரிசி விலை 10 ரூபாய் என்று விற்ருல் தொழிலாளிக்குஎன்ன பயன்? எப்படி அவன் வாங்கிச் சாப்பிட முடியும்?

## வெறும் கோஷம்

வெறும் வெற்று கோஷங்களினுல் ஏமாற்றியதுபோதும். வயிறு காயும் போது கோஷத்தை கண்டு மக்கள் ஏமாறமாட்டார்கள்.

உற்பத்தியை பெருக்கி விட்டோம் என்று ஆட்சியாளர்கள் தம்பட்டம் அடித்துக் கொண்டார்கள். ஆனல் நிலைமை என்ன? ஒரு மழை தவறிவிட்டது. என்றவுடன் பஞ்சம், பற்ருக்குறை ஏற்பட்டுவிட்டது.

## ஊழலை ஒழிக்காமல் விடமாட்டேன்

சமதர்ம சமுதாயம் அமையவேண்டுமானுல்ஊழல் அகற்றப்பட வேண்டும். மேல் மட்டம் முதல் கீழ் மட்டம் வரை எங்கும் ஊழல். ஊழல ஒழிக்கவேண்டும். ஒழிக்காமல் விடமாட்டேன் என்று நான் கூறுகிறேன். இதைக் கண்டு கம்யூனிஸ்டுகள் பயப்படுகிருர்கள். ஏன் பயப்படவேண்டும்?

நான் எந்த முதலாளிக்கும் வால் பிடிப்பவன் அல்ல. எனக்கு ஏழைகளின் வாழ்வு தான் முக்கியம்,

சமதர்ம சமுதாயம்அமைய வேண்டும் என்று அன்று முதல் சொல்லிக்கொண்டிருப்பவன் நான் — இதற்காக யாருக்கும் நான் பயப்படவில்லை. சமதர்மசமுதாயத்தை அமைத்தே தீருவேன்.

## ஊழலுக்கு துணைபோகும் கம்யூனிஸ்டு

ஊழலுக்கு துணை போகிறவர்கள் யார்? கம்யூனிஸ்டுகள் தானே.

ஊழலை ஒழித்தே தீரவேண்டும் என்று தீவிரமாக இறங்கினுல் என்னைக் கண்டு மற்றக் கட்சிக்காரர்கள் ஏன்பயப்படவேண்டும்?

ஊழல் ஒழிப்பு இயக்கம் வெற்றிபெறவேண்டும். இந்த இயக்கத்தில் எல்லா தரப்பு மக்களும் பங்குபெறவேண்டும். பங்கு பெற்ருல்தான் தேசத்தை சீரழிவிலிருந்து காப்பாற்ற முடியும்.

இன்று அரசு போடும் திட்டங்கள்—போட்டுள்ள திட்டங்கள் யாருக்கு லாபம்? கோடிக் கணக்கில் பணக்காரர்கள் சம்பாதிக்க வழி வகுக்கிறது.

திட்டக்கமிஷன் சரிவர செயல்படவில்லை.

பல கோடி ரூபாய்க்கு திட்டம் போட்டிருக்கிருர்கள் திட்டம் போட்டால் போதுமா? நோட்டுகளை மட்டும் அச்சடித்துக் கொண்டே இருந்துவிட்டால் போதுமா?

பணக்காரர்களுக்கு வரி போடுகிறோம் என்று ஆட்சியாளர்கள் கூறுகிருர்கள். வரி வசூலாயிற்ரு? ஏன் ஆகவில்லை. சட்டம் போட்டால் மட்டும் போதுமா? பயன் கிடைத்ததா?

## மேலும் தவறு செய்யாதீர்

நான் தொழிலாள சகோதரர்களையும் கேட்டுக் கொள்கிறேன் - உங்கள் உரிமைகளை நீங்கள் பெறத்தான் வேண்டும். இதனை பெறுவதில் வேலை நிறுத்தம் செய்வதை கடைசி கட்டமாக வைத்துக் கொள்ளுங்கள். உற்பத்தி பெருக்கு என்பது உங்கள் கையில் தான் இருக்கிறது. நாடு உங்களைத்தான் நம்பி இருக்கிறது.

நல்ல ஆட்சி இல்லாததனல் கடந்த 8 வருடங்களாக தமிழகத்தின் வளர்ச்சி தடைப்பட்டுவிட்டது மேலும் ஒரு முறை தவறு செய்தால் பெரும் வீழ்ச்சி ஏற்படும்.

மேற்கண்டவாறு காமராஜ் பேசினர்.

# சென்னை குடிநீர் பஞ்சம்: சுப்பிரமணியம் ஆலோசனை

புதுடெல்லி, ஏப். 30—சென்னை நகர தண்ணீர் பஞ்சத்தை சமாளிக்க மாநில அரசுக்கு எப்படி உதவலாம் என்று மத்திய நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் ஆலோசித்து வருவதாகத் தெரிகிறது.

வெளிநாடு சென்றிருந்ததால் சென்னையில் தற்போதைய நிலைமை பற்றி தமக்கு தெரியாது என்று நேற்று டெல்லியில் நிருபர்களிடம் மந்திரி கூறினர் தாங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்று நிருபர் கேட்டதற்கு, "பணம் தண்ணீரை கொண்டு வராது" என்ருர் மந்திரி சுப்பிரமணியம்.

மத்திய அரசு ராணுவத்தை அனுப்பி உதவியளிக்குமா என்றதற்கு அளிக்கலாம் என்ருர். பாலாற்றில் போதிய தண்ணீர் இருப்பதாகவும் அவசரமாக குழாய்கள் அமைக்கப்பட வேண்டும் என்றும், கூறியதற்கு சிவில் அரசுகூட இதனைச் செய்ய முடியும் என்ருர்,

1972லேயே முடிவடைய வேண்டிய வீராணம் திட்டம் முடிவடையாதிருப்பது பற்றி சுப்பிரமணியம் குறை கூறினர்.

காங்கிரஸ் எம். பி. யினர் மந்திரி சி. சுப்பிரமணியத்தைச் சந்தித்து ஆவன புரியுமாறு கோர இருக்கின்றனர்.

நெடுஞ்செழியன் கேள்வி

# சட்டசபைக்கு அதிமுக எம்எல்ஏக்களை எம்ஜிஆர் அனுப்புவது சரியா?

**கொடைக்கானல், ஏப். 30— 'செத்துப்போனது' என்று சொன்ன சட்டசபைக்கு அ. தி. மு. க. எம். எல். ஏ.க்களை, எம்.ஜி.ஆர். அனுப்புவது சரியா என்று அமைச்சர் நெடுஞ்செழியன் கேட்டார்.**

கொடைக்கானலில் நடைபெற்ற திமுகழகப் பொதுக் கூட்டத்தில் நெடுஞ்செழியன் பேசியதாவது:—

காமராசர் எங்களையெல்லாம் முட்டாள்கள் என்று சொன்னுலும்கூட, நாங்கள் அவரை மதிக்கிறோம். அவருடைய தியாகங்களைப் போற்றுகிறோம். காமராசர் எங்களையெல்லாம் முட்டாள்கள் என்று சொல்லிவிட்டதற்காக நாடு எங்களை மதிக்காமல் போய்விடவும் இல்லை. முட்டாள்களை மதித்து இந்த நாட்டு மக்கள தந்த இடம் சேதாரம் போக இன்றைக்கு இருப்பது 169.

பாண்டிச்சேரியில் கவர்ச்சியை மட்டுமே அடிப்படையாக வைத்துக் கொண்டிருக்கிற- மத்தாப்பூ போன்றிருக்கிற- அ தி மு க—தனக்குத் தான் ஆளத் தெரியுமென்று வீராப்பு பேசுகிற கட்சி 21 நாட்களுக்குமேல் ஆள முடியவில்லை. இதே 15பேரை வைத்துக்கொண்டுதான் முன்னுள் முதல்வர் பாருக் 5 ஆண்டு காலம் ஆண்டார் என்பது உங்களுக்கெல்லாம் நினைவில் இருக்குமென்று கருதுகிறேன். ஆளத் துடித்துக் கொண்டிருக்கிற அதிமுக கட்சி, பாண்டிச்சேரியில் தொடர்ந்து ஆள முடியவில்லை, கவிழ்ந்த மந்திரி சபை இன்னும் நிமரவே இல்லை.

சமீபத்தில் இந்திரா காந்தி அம்மையார் அங்குபோனுர், தேர்தல் எப்பொழுது என்று அந்தஅம்மையாரிடம் கேள்விகளைக் கேட்டனர். அதற்கு இந்திரா காந்தி அம்மையார் எனக்குத் தெரியாது என்று சொல்லிவிட்டார்.

அ. தி. மு. க.வினர்ஆட்சிக்கு வந்தும்கூட, ஆளத் தெரியவில்லை. ஆளும் கட்சி நிதியமைச்சர் படிக்கவேண்டிய பட்ஜெட்டை எதிர்க்கட்சி வரிசையில் இருந்த பாருக் படித்தார். வெட்கம் இல்லாமல அ. தி. மு. க. வினர் ஆட்சியைவிட்டு கீழே இறங்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

## தூங்கும் புலி

அகில இந்தியாவிலே தமிழகத்தைத் தவிர, வேறெந்த மாநிலத்தில் நீடித்த ஆட்சி நடைபெற்று கொண்டிருக்கிறது என்று படித்தறிந்த நண்பர்களைப் பார்த்து கேட்க ஆசைப்படுகிறேன். 'தூங்குகிற புலியை ஒரு தட்டு தட்டினல் தட்டியவன் பாடு என்னவாகும் என்பது உங்களுக்கு நன்கு தெரியும், அதுமாதிரி, 25 வருட காலம் அரசியலுக்கே வராமல் ஒதுங்கி இருந்த ஜெயப்பிரகாஷ் நாராயணனை இந்திரா காந்தி அம்மையார் தூண்டி விட்டார். அவசர கால சட்டத்தை வைத்துக் கொண்டு எதிர்க்கட்சியை ஒடுக்க நினைக்கிற இந்திரா காந்தி அம்மையாரைப் பதவியிலிருந்து அகற்றிவிட்டு தான் வேறு வேலைபார்ப்பேன்என்று ஜெயப்பிரகாஷ் நாராயணன் இன்று கிளம்பியிருக்கிறார். அதனுடைய பலனை இந்திரா காந்தி அம்மையார் அனுபவித்துக் கொண்டிருக்கிறார். ஜெயப்பிரகாஷ் நாராயணனது 'தீ' எல்லா மாநிலங்களிலும் பரவி வருகின்றது. கபூர் மந்திரி சபையைக் கவிழ்த்துவிட்டுத்தான் வேறு வேலை பார்ப்பேன் என்று சொன்னர். கவிழ்த்தார்,

## குஜராத் நிலை என்ன?

குஜராத்தில் வீழ்ந்தமந்திரி சபையை இந்திரா காந்தியால் நிமர்த்த முடியவில்லை. முன்னுள் உதவிப் பிரதமராக இருந்த மொரார்ஜி தேசாய் அங்கு விரைவில் தேர்தல் நடத்த வேண்டும், இல்லையேல் சாகும் வரை உண்ணுவிரதம் இருப்பேன் என்று சொன்னர். அதற்கு அந்த அம்மையார் முதலில் இணங்கவில்லை, மொரார்ஜி தேசாய் கோரிக்கைக்கு இணங்கமாட்டேன் என்று சொன்ன இந்திரா காந்தி—உண்ணுவிரதம் இருக்கட்டுமே என்று சொன்ன இந்திராகாந்திஎன்னைமிரட்ட முடியாது என்று சொன்ன இந்திராகாந்தி—ஏழே நாளில் இறங்கி வந்து உண்ணுவிரதத்தை முடித்துக்கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். ஜெயித்தது மொரார்ஜி தேசாயும் — ஜெயப்பிரகாஷ் நாராயணனும் ஆவார்கள்.

## அ. தி. மு.க.வினர் சட்டசபைக்கு வரலாமா?

ஒரு கட்சியின் தலைவர் சட்டமன்றத்திற்கு ஏறத்தாழ இரண்டரை வருடங்

4-ம் பக்கம் பார்க்க

# பிலோ இருதயநாத்துக்கு ஜனதிபதி பரிசு

புதுடெல்லி, ஏப். 30—பிரபல மானிட இயல் அறிஞரான பிலோ இருதயநாத்துக்கு ஜனதிபதி பரிசு வழங்கினர்.

1974ம் ஆண்டின் சிறந்த ஆசிரியர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு ஜனதிபதி நேற்று பரிசு வழங்கினர்.

மொத்தம் 96 ஆசிரியர்களுக்கு ரூ. 1000 பரிசும், கௌரவ நற்சான்றுகளும் வழங்கப்பட்டன.

இந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்ட பிலோ இருதயநாத்துக்கு ஜனதிபதி பரிசு வழங்கினர்.

பரிசு வழங்கி ஜனதிபதி பேசுகையில் கல்வியைப் பரப்புவதில் ஆசிரியர்களின் பணி மகத்தானது என்று கூறினர்.

தமிழக அரசு கூறிய யோசனை

# மணலி ஆலைகள் நிராகரிப்பு

சென்னை, ஏப். 30—மணலியில் உள்ள எண்ணெ சுத்திகரிப்பு தொழிற்சாலையும், ரசாயன உரத் தொழிற்சாலையும் பராமரிப்பு விடுமுறையை முன்கூட்டிவிடும் யோசனையை ஏற்க இயலவில்லை என்று தெரிவித்திருப்பதாக அவற்றின் நிர்வாகிஒருவர் கூறினர்.

சென்னை நகர குடிநீர் தட்டுப்பாட்டை ஒட்டி அந்த இரு ஆலைகளுக்கும் ஆண்டுதோறும் விடும் பராமரிப்பு விடுமுறையை முன் கூட்டி விடுமாறு தமிழக அரசு ஆலோசனை தெரிவித்து இருந்தது.

இந்த ஆலோசனையை ஏற்க இயலாது என்று இப்போது அந்த இரு ஆலைகளும் அறிவித்துள்ளன.

பராமரிப்பு விடுமுறை விடாவிட்டாலும் அவர்கள் உபயோகிக்கும் தண்ணீரில் தினமும் 20 லட்சம் காலன் தண்ணீரை குறைத்துக் கொள்ள சம்மதம் தெரிவித்துள்ளனர்.

சுத்திகரிப்பு ஆலைக்கும், ரசாயன உரத்தொழிற்சாலையும் 6 மாதங்களுக்கு முன்பு தான் பராமரிப்பு விடுமுறை விடப்பட்டது.

இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் இந்த விடுமுறை விடுவது வழக்கம். ஆகவே எங்களின் இயலாமையைத் தெரிவித்து விட்டோம் என்று ஆலை நிர்வாகி ஒருவர் தெரிவித்தார்.

தினமும் 20 லட்சம் காலன் தண்ணீரைக் குறைத்துக் கொள்வதால் சுத்திகரிப்பு தொழிற்சாலை உற்பத்தி பாதிக்கப்படமாட்டாது. ஆனால் ரசாயன உரத் தொழிற்சாலை ஓரளவு பாதிக்கப்படலாம் என்று அவர் தெரிவித்தார்.

பஞ்சட்டி பகுதியில் இருந்து தினமும் 90 லட்சம் காலன் தண்ணீர் கொண்டுவரப்படுகிறது. இதில் 60 லட்சம் காலன் மணலி தொழிற்சாலைகளுக்குக்கொடுக்கப்படுகிறது. மீதம் 30 லட்சம் காலன் சென்னை நகருக்கு விடப்படுகிறது.

மணலி தொழிற்சாலைகளில் உபயோகத்துக்கு தரப்படும் தண்ணீரில் 20 லட்சம் காலன் சென்னை நகருக்கு இனி கிடைக்கும்.

# உள்ளூர்வாசிகளுக்கே வேலை: அரசு கொள்கை பற்றி சாதிக்பாட்சா

சென்னை, ஏப். 30— 80 சதவிகித வேலைகளை உள்ளூர்வாசிகளுக்கே ஒதுக்கவேண்டும் என்ற அரசின் கொள்கை நியாயமானதே என்று தொழில் அமைச்சர் சாதிக்பாட்சா கூறினர்.

தென்னிந்திய முதலாளிகளின் சங்க 55-வது ஆண்டு விழாவில் சாதிக் பாட்சா பேசினர்.

சங்கத் தலைவர் ராமநாதன் பேசுகையில், உள்ளூர் வாசிகளுக்க வேலை என்பது ஒரு மென்மையான பிரச்சினை என்றார்.

நிர்ப்பந்தமோ கடுமையான சட்டங்களோ எதிர்பார்க்கும் பலனைத்தராதுஎன்றும், முதலாளிகளுடன் கலந்து பேசி இது சம்பந்தமான முடிவுகளை அரசு மேற்கொள்ளவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

இதற்குப் பதிலளிக்கும் வகையில் சாதிக்பாட்சா பேசியதாவது:

மண்ணின் மைந்தர்களுக்க்க வேலை தரவேண்டும் என்பது அரசின் கொள்கை அல்ல. ஆனல் அப்படிப்பட்ட ஒரு கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டிய ஒரு நிர்ப்பந்தம் நமக்கு ஏற்பட்டிருக்கிறது. ஏனெனில் மற்ற மாநிலங்கள் அதைத் தீவிரமாகக் கடைபிடிக்கும்போது நாம் மட்டும் பேசாமல் இருக்க முடியாது.

நம் நாட்டு மக்களின் கல்விக்காகவும், பயிற்சிக்காகவும் நாம் நிறைய செலவு செய்கிறோம்.

அப்படிப் பயிற்சி பெற்ற உள்ளூர் வாசிகளுக்கு வேலை இல்லை என்ற நிலை ஏற்படும்போது அவர்களிடையே ஏற்படும் ஏமாற்றத்தையும் அமைதியின்மையையும் நாம் உணர்ந்துகொள்ளவேண்டும். இவர்களுக்கு வேலை உறுதியளிப்பது தொழிலின் நலனுக்கே நல்லதாகும்.

இந்த விஷயத்தில் அரசாங்கத்தின் குறிக்கோளுக்கு தொழில் அதிபர்கள் ஒத்துழைப்பு அளிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன் என்று சாதிக்பாட்சா கூறினர்.

## லே-ஆப் நஷ்டஈடு

லே-ஆப் விடப்படும்போது தொழிலாளர்கள் இழக்கும் ஊதியத்தை, மாநில அரசும், மத்திய அரசும் சேர்ந்து ஈடுகட்ட வேண்டும் என்றயோசனையையும் சாதிக்பாட்சா தெரிவித்தார்.

இப்படி ஒரு யோசனையை தொழிலாளர் நல அமைச்சர் ராஜாராம் கூறியிருப்பதாக தெரிவித்து அதை எதிர்ப்பதாக சங்கத் தலைவர் ராமநாதன் கூறியிருந்தார்.

இதற்கு பதிலளிக்கும் வகையில் சாதிக்பாட்சா, லே-ஆபின் போது நஷ்டஈடு அளிப்பது அரசின் கொள்கை அல்ல என்றார்.

தொழிலாளர் நல அமைச்சர் அப்படிக் கூறியிருந்தால் அது அவருடைய சொந்த யோசனையாகும் என்றும் சாதிக்பாட்சா கூறினர்.

கூட்டத்துக்கு ராமநாதன் தலைமை வகித்துப் பேசுகையில் தற்போதைய சம்பள நிர்ணய முறை முற்றிலும் மாற்றியமைக்கப்பட வேண்டும் என்றார். குறிப்பாக பஞ்சப்படியை வாழ்க்கைச்செலவு குறியீட்டுப் புள்ளியுடன் இணைத்திருப்பது பண வீக்கத்தை ஏற்படுத்தியிருப்பதுடன், ஊதிய முறையையே குலைத்து விடுகிறது என்று கூறினர்.

### பஞ்சப்படிக்கு உச்சவரம்பு

பஞ்சப்படியின் ஒரு பகுதியை அடிப்படை ஊதியத்துடன இணைக்கவேண்டும். வாழ்க்கைச் செலவு புள்ளி, 1970ம் ஆண்டு விலைவாசி அடிப்படையில் கணக்கிட வேண்டும். பஞ்சப்படி தருவதற்கு நியாயமான அளவில் உச்சவரம்பு நிர்ணயிக்கவேண்டும் என்ற யோசனைகளையும் ராமநாதன் தெரிவித்தார்.

லே-ஆப்புக்கு நஷ்டஈடு தருவது சம்பந்தமாக தொழிலாளர்கள் முதலாளிகள் அரசாங்கம் ஆகிய 3 தரப்பாரும் சேர்ந்து பொது இன்சூரன்ஸ் ஏற்படுத்தி, தொழிலாளர்களுக்கு சம்பள இழப்பு இல்லாமல் பார்த்துக் கொள்ளலாம் என்றும் ராமநாதன் யோசனை தெரிவித்தார்.

# இன்றைய சினிமா

**சென்னை**

ராம் — கஸ்தூரி விஜயம்
நியூ எல்பின்ஸ்டன் — விஷ்ணு விஜயம்
நேஷனல் — பாவமன்னிப்பு
ஈராஸ் — அவளும் பெண்தானே

**பல்லாவரம்**

லக்ஷ்மி — கஸ்தூரி விஜயம்

**தாம்பரம்**

நேஷனல் — குப்தஞான்
எம். ஆர். தியேட்டர் — தாய்ப்பாசம்
ஸ்ரீ சித்ரா — தேன் சிந்துதே வானம்

**வில்லிவாக்கம்**

ராயல் — பட்டாம்பூச்சி

**தரோம்பேட்டை**

வெற்றி — அவன்தான் மனிதன்

**கொளத்தூர்**

ஸ்ரீ குமரன் — அவள் ஒரு தொடர் கதை

# மேலும் 2 கூட்டுறவு தேயிலை ஆலைகள்

சென்னை, ஏப். 30—கடந்த 1973—74-ம் ஆண்டில் கூட்டுறவு துறையில் மற்றொரு தேயிலை தொழிற்சாலையானது உற்பத்தி துவங்கியது. நீலகிரியில் மேலும் இரண்டு கூட்டுறவு தேயிலை ஆலைகள் துவங்கப்பட விருக்கின்றன. இந்த தகவல் இந்த மாதம் 28-ஆம் தேதி நடைபெற்ற தமிழ்நாடு மாநில தொழில் கூட்டுறவு வங்கியின் 13வது பேரவை கூட்டத்தில் தாக்கல் செய்யப்பட்ட அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

மேலும் அந்த அறிக்கையில் கூறப்பட்டிருப்பதாவது:

ராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் தீக்குச்சி தயாரிப்பாளர்களுக்காக தொழிற் சேவை கூட்டுறவு சங்கங்களை நிறுவதிட்டமிடப்பட்டிருக்கிறது. இதற்கு முன்பே அங்கு இத்தகைய சேவை செய்யும் சங்கங்கள் இயங்கி வருகின்றன.

இப்போது தொடங்கப்படவிருக்கும் மூன்று கூட்டுறவு தொழிற் சேவை கழகங்களைச் சேர்த்து மேற்கண்ட மாவட்டங்களில் இயங்கும் கூட்டுறவு தொழிற்சேவை கழகங்களின் எண்ணிக்கை 8-ஆக உயரும்.

தமிழ்நாடு மாநில தொழிற் கூட்டுறவு வங்கி 1974-ம் ஆண்டு ஜூன் 30-ம் தேதி வரை ரூ. 208·23 லட்சம் கடனுக வழங்கி இருக்கிறது. இதற்கு முந்தைய ஆண்டில் ரூ. 163·20 லட்சம் தான் கடனுக வழங்கி இருந்தது.

1973—74-ல் தமிழ்நாடு மாநில தொழிற் கூட்டுறவு வங்கிக்கு கிடைத்த நிகர லாபம் 2,02,408 ரூபாய் 38 காசு.

1973ம் ஆண்டுஜூன்இறுதி வரை வங்கியின் பங்கு மூலதனம் ரூ. 5060700. 1974ம் ஆண்டு ஜூன் 30ஆம் தேதி வங்கியின் பங்கு மூலதனம் ரூ. 5147900ஆக உயர்ந்தது.

"சென்ற ஆண்டு ஜூன் வரை தமிழ்நாடு அரசு வங்கியில் முதலீடு செய்திருந்த பங்கு தொகை ரூ. 25.30 லட்சமாக இருந்தது. மேலும் இந்த ஆண்டு தமிழ்நாடு அரசு இந்த வங்கியில் 10 லட்சரூபாய் முதலீடுசெய்யும் என்று எதிர்பார்க்கப்படுகிறது"

இவ்வாறு அந்த அறிக்கை மேலும் கூறுகிறது.

தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கியின் 13-வது பேரவைக் கூட்டம் இந்த மாதம் 28-ந் தேதி தமிழ்நாடு கூட்டுறவு யூனியன் சங்கக் கட்டிடத்தில் நடைபெற்றது. பேரவைக் கூட்டத்திற்கு வங்கியின் தலைவர் மணிவண்ணன் தலைமை வகித்தார். நிர்வாக அதிகாரி பி. ஏ. கிருஷ்ணமூர்த்தி ஆண்டு அறிக்கையை வாசித்தார்.

வங்கியின் துணைத் தலைவர் சி.கிருஷ்ணமூர்த்தி நன்றிகூறினர்.

# சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

பட்டினபபாக்கம் குடியிருப்போர் சங்கம் பள்ளிக்கூட திறப்புவிழா, பெற்றோர் தின விழா. தலைமை: ப. அப்துல் லத்தீப். மாடி கட்டடத்தை திறந்து வைப்பவர் அமைச்சர் நெடுஞ்செழியன். பங்குகொள்வோர்: விசாலாட்சி நெடுஞ்செழியன், நடிகை ஜெயசுதா. மாலை 5-30 மணி.

தமிழ்நாடு பொதுப்பணித் துறை ஊழியர் சங்கம். மே தின விழா. தலைமை: சி. குப்புசாமி சிறப்புரை: அமைச்சர் அன்பில் தர்மலிங்கம், இடம்: கிரசண்ட் ஹால் திருவல்லிக்கேணி, மாலை 4-மணி

அருள்நெறி சபை: ஸ்ரீராம நவமி விழாவினையொட்டி ராஜகோபால் "நகும்பலை வேள்வி" என்பது பற்றி உபந்யசிப்பார். ஸ்ரீகிருஷ்ணசாமி பாலர் வித்யாலயா பள்ளி 8, புலியூர் 2-வது சாலை டிரஸ்ட்புரம் கோடம்பாக்கம் இரவு 7-30 மணி.

தி மதராஸ் லேபர் யூனியன்: பட்டாளம் மணிக்கூண்டு அருகில் கே.சுப்பு தலைமையில் நடைபெறும் மே தின விழாவில், முதல்வர் கருணாநிதி, அமைச்சர் சர் எஸ். ராமச்சந்திரன். த.நா. கம்யூ. தலைவர், மணலி கந்தசாமி மற்றும் பலர் பேசுவர். மாலை 6 மணி.

ஹிந்த் மஸ்தூர் சபா: என். ஷண்முகனர் தலைமையில் மே தின விழா நடைபெறும். எஸ். சி. சி. அந்தோணிப் பிள்ளை, எஸ். கிருஷ்ணன், சி. கே. நாராயணன் மற்றும் பலர் உரையாற்றுவர். ஆதம்சாயபு தெரு, ராயபுரம். மாலை 6-30 மணி.

# வியட்நாமில் போர் நிறுத்த உடன்பாடு

சைகோன் ஏப். 30—வியட்நாமில் போரை நிறுத்துவதற்கு புரட்சி அரசுக்கும் சைகோன் அரசுக்கும் இடையே கொள்கை அளவில் உடன்பாடு ஏற்பட்டு விட்டதாக சைகோன் அரசு வட்டாரங்கள் தெரிவித்தன.

தெற்கு வியட்நாமின் துணை ஜனதிபதி வான் ஹுயன் நேற்று புரட்சி அதிகாரிகளை சந்தித்துப் பேசி போர் நிறுத்த உடன்பாட்டுக்கு வந்தார்.

தெற்கு வியட்நாமிலிருந்து மிச்சமீதியான அமெரிக்கப் படைகள் வெளியேறிஆரம்பித்த சில மணி நேரத்தில் இவ்விதம் போர் நிறுத்த உடன்பாட்டில் தெற்கு வியட்நாமிய (சைகோன்) அரசாங்கம் ஈடுபட்டது.

போர் நிறுத்த உடன்பாட்டுக்கு வருவது என்று முடிவு செய்த தெற்கு வியட்நாம் அரசு அமெரிக்கப் படைகள் 24 மணி நேரத்தில் வெளியேறவேண்டும். அப்படி வெளியேறினுல் போர்நிறுத்த உடன்பாட்டுக்கு உதவியாக இருக்கும் என்று பிரதமர் வான்மால் அறிவித்தார். அதைத் தொடர்ந்து அமெரிக்கப்படைகள் வெளியேற ஆரம்பித்தன.

பின்னர் துணை ஜனதிபதி வான்ஹுயன் ரேடியோ மூலம் பேசுகையில் போரை நிறுத்த புரட்சிப் படைகளின் நிபந்தனைகளை சைகோன் அரசு ஏற்றுக்கொண்டுவிட்டது என்று அறிவித்தார்.

### புரட்சி அரசு மறுப்பு

ஆனுலும் புரட்சி அரசு இதை மறுத்துவிட்டது. போர் நிறுத்த உடன்பாடு எதுவும் ஏற்படவில்லை என்று அது கூறியது 'அமெரிக்காவின் நவகாலனித்துவத்தின் கருவியான சைகோன் அரசு ஒழிய வேண்டும். அதன் போர் யந்திரம் அழிய வேண்டும்' என்றும் புரட்சி அரசு கூறியது.

'போர் நீடிக்கிறது' என்றும் புரட்சி அரசின் அதிகாரி ஒருவர் சொன்னர்.

"ஏற்கெனவே சைகோன் நகரின் சில பகுதிகளில் புரட்சி அரசின் அதிகாரம் ஏற்பட்டு விட்டது" என்றும் அவர் கூறினர்.

சைகோன்நகரம் எந்த நேரத்திலும் வீழ்ந்து விடலாம் என்ற நிலையில்தான் சைகோன் அரசு போர் நிறுத்தத்துக்கு முற்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

### அமெரிக்கர் வெளியேற்றம்

தெற்கு வியட்நாமிலிருந்து அமெரிக்கர்கள் நேற்று அவசர அவசரமாக வெளியேறினர்.

அமெரிக்கத் தூதரக அதிகாரிகள் அவசர கோலத்தில் ரகசியதஸ்தாவேஜுகளை எரித்தனர். தூதரக அதிகாரிகளை ஏற்றிச் செல்ல தூதரக மாடியிலேயே ஒரு ஹெலிகாப்டர் விமானம்வந்து இறங்கியது. பீரங்கி குண்டுகள் வந்து விழுந்து கொண்டிருந்த காரணத்தால் விமானங்கள் வந்து இறங்க முடியாத காரணத்தால் அமெரிக்கர்கள் கிடைத்த வாகனங்களை யெல்லாம் பயன்படுத்தி துறைமுகத்தை நோக்கியும் விமான நிலையத்தை நோக்கியும் விரைந்தனர்.

ஜெயப்பிரகாஷ் யோசனை

# வேட்பாளர்களை பொறுக்குவதில் புதுமுகத்துக்கு வாய்ப்பு

ஆமதாபாத், ஏப். 30—வேட்பாளர்களை பொறுக்குவதில் புதுமுகங்களுக்கு அதிக வாய்ப்பு தரவேண்டும் என்று ஜெயப்பிரகாஷ் கூறினர்.

அடுத்து வர இருக்கும் குஜராத் சட்டசபை தேர்தல்களில் மக்கள் அணிக்குவெற்றி தேடித்தர வேண்டுமென்று ஜெயப்பிரகாஷ் நேற்று மக்களை கேட்டுக் கொண்டார்

பொதுக் கூட்டமொன்றில் அவர் பேசுகையில் மக்கள் அணிக்கு தோல்வி ஏற்பட்டால் அதனை மக்களுக்கு ஏற்பட்ட தோல்வியாகத் தாம் கருதப்போவதாகச் சொன்னர்.

நாட்டு மக்களுக்கு துரோகம் செய்து விட்டதாக புதுக் காங்கிரசை ஜெயப்பிரகாஷ் குற்றம் சாட்டினர் புதுக் காங்கிரசில் ஊடுருவி உள்ள கம்யூனிஸ்டுகள் அதிக முக்கியத்துவம் பெற்று வருவதாக ஜெயப்பிரகாஷ் கூறினர்.

அவர் மேலும் சொன்னதாவது:—

மக்கள் அணி அமைப்பு குஜராத் அரசியல வாழ்க்கையில் அதிக முக்கியத்துவம் வாய்ந்தது. மக்கள் அணிக்கு உலை வைக்கும் எந்தக் காரியமும் நடக்கக் கூடாது. மக்கள் அணிக்கு ஒரே சின்னம் வேண்டும் என்ற கோரிக்கைமீது பகிரங்க அறிக்கை எதுவும் விடுக்காது இருக்கவேண்டும் என்று மக்கள் அணியில் உள்ள கட்சிகளையும் சங்கர்ஷ சமிதி உறுப்பினர்களையும் நான் கேட்டுக் கொள்கிறேன்.

தனிச் சின்னங்கள் இருந்த போதிலும் மக்கள் அணி ஒரு தனி அமைப்பாக தேர்தலில் போட்டியிடுகிறது. அதில் உள்ள பல்வேறு கட்சி வேட்பாளர்கள் மக்கள் அணியின் வேட்பாளர்கள்.

வேட்பாளர்களை பொறுக்குவதில் புது முகங்களுக்கு அதிக வாய்ப்பு தரவேண்டும். பழைய முகங்கள் குறைந்தபட்சமாக இருக்க வேண்டும். வேட்பாளர்கள் 50 வயதிற்குகீழ் இருக்க வேண்டும். 40லிருந்து 45 வயது வரை உள்ளவர்களைப் பொறுக்குவது நல்லது என்றார் ஜெயப்பிரகாஷ்.

நேர்மையானவர்களை வேட்பாளராக தேர்தலில் நிறுத்த வேண்டும்.

பொதுச் சின்னம் பற்றி பழைய காங்கிரஸ் தலைவர் மொரார்ஜி தேசாயை சந்தித்து ஜெயப்பிரகாஷ் நாராயணன் ஒரு மணிநேரம் பேசிக் கொண்டிருந்தார். பொதுச் சின்னம்பற்றி உடன்பாடு ஏற்படவில்லையென்றாலும், மக்கள் அணிக்கு பொதுவான தலைவர், பொதுவான வேலை திட்டம் ஆகியவற்றில் ஏற்பட்ட உடன்பாட்டை ஜெயப்பிரகாஷ் வரவேற்பதாகக் கூறினர்.

# சென்னை மார்க்கெட்

சென்னை, ஏப். 30—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 583 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 55 25

**வெள்ளி**

பார்வெள்ளி (1 கி. கி.) ரூ. 1090 00
உள்ளூர் 104 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 00

**மணிலாப்பயறு**

கோடைகால பட்டாணி 270 00
மொத்த விலை

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 760 00
சில்லரை விலை ரூ. 8 50

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 460 00
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 82 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 164 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 154 00
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 70

**கடலைப்பிண்ணாக்கு**

70கி.கி.கொண்டமூட்டைக்கு எக்ஸ்பெல்லர் ரூ. 70 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 492 00
முதல் ரூ. 494 00

# மதுரையில் பால் பவுடர் உற்பத்தி ஆலை

மதுரை, ஏப். 30—பால் பவுடர் உற்பத்தி ஆலை மதுரையில் வரும் நவம்பர் மாதம் முதல் விற்பனைக்கான பால் பவுடர் உற்பத்தியைத் தொடங்கும்.

ஒரு கோடி ரூபாய் செலவில் இது நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது.

திட்டமிட்டதற்குமேலாண்டு காலம் தாமதமாகவே இது உற்பத்தியைத் தொடங்குகிறது.

இது உற்பத்தி செய்யப்போவது ஆடை எடுத்த பால் பவுடர், முழு பால் பவுடரும் குழந்தை உணவும்கூட இது உற்பத்தி செய்யும். ஆனல், அதற்கு சில அதி நவீன யந்திரங்களை இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது. அந்த யந்திர சாதனங்களெல்லாம் வந்து சேர்ந்து உற்பத்தி ஆரம்பமாக 1976 நவம்பர்—டிசம்பர் ஆகும்.

மதுரை நகருக்கு விநியோகம் செய்யப் போதுமான பால் சப்ளை இங்குள்ள பால் பண்ணைக்குக் கிடைத்துக் கொண்டிருந்தது. ஆனல், வறட்சியின் காரணமாக அதில் இப்போது நாள்தோறும் 15 ஆயிரம் லிட்டர் குறைந்து விட்டது.

இப் பண்ணையில் வெண்ணை விற்காமல் தேங்கியிருப்பது ஒரு பிரச்னையாகும் போல் தோன்றுகிறது. சென்னைக்கு இது 100 டன் வெண்ணை அனுப்பி வைத்த பின்பும் இதனிடம் 10 டன் வெண்ணெய் இருக்கிறது.

# அடுத்த ஆண்டு பார்லிமெண்ட் தேர்தல் நடக்கும்

புதுடில்லி. ஏப். 30—இப்போதுள்ள நிலைமைப்படி 1976-ம் ஆண்டின் ஆரம்ப கால மாதங்களில் நாடாளுமன்ற தேர்தல்கள் நடைபெறுமென்று சட்ட இலாகா மந்திரி கோகலே நேற்று நாடாளுமன்றத்தில் கூறினர்.

அவசர நிலைமை பிரகடன விதிகளின் கீழ் தேர்தலை 1977க்கு ஒத்திப் போடும் யோசனை எதுவும் இல்லை என்றார்.

குஜராத் தேர்தலில்

# ஓட்டுச் சீட்டில் வாக்காளர் கையெழுத்து போடும் முறை ரத்து

புதுடெல்லி, ஏப் 30—ஓட்டுச் சீட்டின் அடிக்கட்டையில் வாக்காளர் கையெழுத்து போடும் முறையை ரத்து செய்ய அரசாங்கம் ஒப்புக்கொண்டது.

தேர்தல் சீர்திருத்தம் சம்பந்தமாக எதிர்க் கட்சித் தலைவர்களுடன் அரசாங்கம் நேற்று மீண்டும் விவாதம் நடத்தியது.

தேர்தல் முறையில் குஜராத் தேர்தலுக்கு பொருந்தும்படியாக சில மாறுதல்களைச் செய்ய அரசாங்கம் அப்போது ஒப்புக்கொண்டது.

எனினும் ஒரு வேட்பாளரின் தேர்தல் செலவு சம்பந்தமான சட்டப்பூர்வ வரம்பை உயர்த்தவேண்டும் என்ற சர்க்கார் யோசனையை எதிர்க்கட்சிகள் வன்மையாக எதிர்த்தன. இப்பிரச்னை குறித்து மேற்கொண்டு விவாதம் நடக்கும்வரை தற்போதுள்ள வரம்பேநீடிக்கவேண்டும் என்றுகருதப்பட்டது.

அரசாங்கம்ஒப்புக்கொண்ட மாறுதல்களுக்காக அரசியல் சட்டத்தைத் திருத்தும் அல்லது மக்கள் பிரதிநிதித்துவ சட்டத்தைத் திருத்தும் அவசியம் இராது. ஆனல் சர்க்கார் உத்தரவு ஒன்றின் மூலம் அல்லது விதிகளில் திருத்தம் மூலம் மாறுதல்களைச் செயல்படுத்தமுடியும்.

வோட்டுசீட்டு வழங்கப்படுவதற்கு முன், வோட்டு சீட்டின் அடிக்கட்டையில் வாக்காளர் கையெழுத்து அல்லது கைரேகை பெற வேண்டும் என்று சமீபத்தில் புகுத்திய நடைமுறையை நீக்கவும் சர்க்கார் ஒப்புக் கொண்டது. இத்தகைய நடைமுறை வாக்காளர் மனத்தில் சந்தேகத்தைத் தோற்றுவிப்பதாக எதிர்கட்சித் தலைவர்கள் புகார் தெரிவித்தனர்.

### ரூ. 18 கோடி தேவை

வாக்காளர் சீட்டுகளை இலவசமாக சப்ளை செய்வதாக இருந்தால் சர்க்காருக்கு செலவு அதிகமாகும். அதாவது ஒவ்வொரு மக்கள் சபை தொகுதிக்கும் 5 வேட்பாளர்கள் ஒவ்வொரு அசெம்பிளி தொகுதிக்கும் 7 வேட்பாளர்கள் என்ற அடிப்படையில் கணக்கிட்டால் ரூ 18 கோடி செலவாகும் என்று அரசாங்க அதிகாரிகள் கூறினர்.

ஏஜண்டுகள் நியமன பாரங்கள் இலவசமாக சப்ளை செய்யப்படும்.

# சஞ்சீவ ரெட்டி - ஜெயப்பிரகாஷ் சந்திப்பு

ஹைதராபாத், ஏப். 30—மக்கள் சபையின் முன்னள் சபாநாயகர் சஞ்சீவ ரெட்டியை ஜெயப்பிரகாஷ் நாராயண் சந்திப்பார் என்று தெரிகிறது, நாளை (மே மாதம் 1-ம் தேதி) ஜெயப்பிரகாஷ் ஹைதராபாத் வர இருக்கிறார். அப்போது ஜெயப்பிரகாஷை சந்தித்து ஆந்திரமாநிலத்தில் போராட்டத்திற்கான பொதுவான திட்டமொன்றை சஞ்சீவ ரெட்டி வகுப்பார் என்று எதிர் பார்க்கப்படுகிறது. பேச்சுவார்த்தைகள் மே 3-ம் தேதிவரை தொடரும்.

வேலைவாய்ப்பு இல்லாத இளைஞர்களை திரட்டி மாநில தலைமைச் செயலகம் முன்பு போராட்டம் நடத்தப்போவதாக சஞ்சீவ ரெட்டி முன்பு அறிவித்திருந்தது தெரிந்ததே.

# மே 1-ந் தேதி ஒரிசாவில் பீஹார் பாணி போராட்டம்

புவனேஸ்வரம், ஏப். 30—ஒரிஸாவில் பீஹார் பாணி இயக்கத்தின் முதல் கட்டம் மே 1ந்தேதி ஆரம்பமாகும் அன்றைய தினம் மக்களின் கோரிக்கை தினமாகக்கொண்டாடப்படும்.

மாநிலம் முழுதும் அமைதியான முறையில் ஆர்ப்பாட்டங்களும், பொதுக் கூட்டங்களும் நடத்தி, மக்களின் கோரிக்கைகளை வலியுறுத்துமாறு கிராம கமிட்டி கன்வீனர் நவகிருஷ்ண சவுத்ரி கேட்டுக் கொண்டார்.

ஜெ. பி. இயக்கத்தை ஆதரிக்கும் கட்சிகளில் பாரதிய லோகதளம் மட்டும் மே 1ந் தேதி கோரிக்கை தினம் அனுஷ்டிக்கும்படி தனது கட்சிக் கிளைகளைக் கேட்டுக் கொள்ளவில்லை.

# காந்தி புத்தகத்தை எரிக்க முயற்சி

பம்பாய், ஏப். 30—காந்தி எழுதிய ஒரு புத்தகத்தை எரிக்கபம்பாயில்தலித்பாந்தர் கட்சியினர்முயற்சிசெய்தனர்.

'வர்ணசிரமதர்மம்' என்ற இந்த நூல் காந்திஜியால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டதாகும்

ஆசாத் மைதானத்தில் இந்தப் புத்தகத்தின் ஒரு பிரதியை எரிக்க தலித் பாந்தர் கட்சியினர் முயற்சித்தனர். தக்க நேரத்தில் தலையிட்டு இந்த முயற்சியை போலீசார் தடுத்தனர்.

இந்தச் சம்பவம் தொடர்பாக போலீசாரால் 15 பேர் கைது செய்யப்பட்டு பிறகு விடுதலை செய்யப்பட்டனர்.

# திரை உலகம்

அண்ணயா வளக்கு' படத்தில் மு க முதது.

## யார் தெரியுமா?

மூக்கிலே புல்லாக்கு, காதிலே லோலாக்கு, பின்னல் ஜடையில் மல்லிகைப் பந்தல், இதழ்களில் பழக்குலே, கண்களில் மின்னல் வெட்டு

இப்படி இத்தனே அழகோடு இருக்கும் இந்தப் பருவச்சிட்டு யார்? தெரிந்தால் சொல்லுங்கள்—புதுமுகங் களுக்காக காலேத் தேய்த்துக் கொண்டு அலேபவர்கள் கொத்திக் கொண்டு போகட்டும்.

தெரியாவிட்டால்— 6 ...

விஜயகுமார் எதறகாக நெருங்குகிரு எனபது சுஜாதாவைப் பார்த்தாலே தெரியவில்லேயா ?
(படம்: தென்னங்கீற்று)

## ஜெயதேவி நாட்டிய அரங்கேற்றம்

வாகினி நாட்டியாலயாவின் மாணவி குமாரி ஜெயதேவியின் பரத நாட்டிய அரங்கேற்றம் மயிலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப் கலேயரங்கில் நடைபெற்றது.

உயர்நீதி மன்ற நீதிபதி மகராஜன், கவிஞர் எஸ். டி. சுந்தரம் ஆகியோர் குமாரி ஜெயதேவியைப் பாராட்டிப் பேசினர்.

## 'பூமிதேவி புஷ்பினியாயி' பரிசளிப்பு விழா

'பூமிதேவி புஷ்பினியாயி' மலேயாளப் படத்தின் வெற்றி விழா சென்னே. உட்லண்டஸ் ஓட்டலில் நடைபெற்றது.

படத்தில் நடித்த பிரேம நசீர், ஜெயபாரதி, உம்மர் மது மற்றும் தொழில் நுட்ப நிபுணர்களுக்கும் ஏ.எல் சீனிவாசன் கேடயங்களே வழங்கினுர்.

சுந்தர்லால்நகாதா மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

தயாரிப்பாளர் பி. கே. கைமால் நன்றி கூறினுர்.

## சிவகுமார் ஜெயசித்ரா நடிக்கும் புதிய படம்

திருலோக் பிலிம்சார் தயாரிக்கும் புதிய படத்தில் சிவகுமாரும், ஜெயசித்ராவும் நடிக்கின்றனர்.

மற்றும் வி. கே. ராமசாமி, மேஜர் சுந்தர்ராஜன், நாகேஷ், சுருளிராஜன், ஸ்ரீபிரியா, மனேரமா ஆகியோரும் நடிக்கின்றனர்.

ஆரூர்தாஸ் வசனம் எழுதுகிருர். வாலியின் பாடல்களுக்கு விஸ்வநாதன் இசையமைக்கிருர்.

கதை டைரக்ஷன் பொறுப்புகளே ஏ. சி. திருலோக்சந்தர் ஏற்றுள்ளார். புகழேந்தி படத்தைத் தயாரிக்கிருர்.

## 'உண்மைக்கு ஏது உறக்கம்?'

சரவணுகிரியேஷன்சாரின் "உண்மைக்கு ஏது உறக்கம்?" என்ற புதிய நாடகம் மயிலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப்பில் நடைபெற்றது.

"நானே நமதே" படத்தில் லதா

## தமிழ்ப் படங்களில் நகைச்சுவை

# 'அடித்தளம் இல்லாத அடுக்கு மாளிகை' ரவிச்சந்திரன் தாக்கு

தமிழ்ப்படங்களில் இரு பொருள்படும் ஆபாச வசனங்கள் இடம் பெறுவதை நான் வெறுக்கிறேன்.

நகைச்சுவைக்காக இப்படி எழுதப்படுகிறது என்று பலர் கூறக் கேள்விப்படுகிறேன். இதுவரையில் தமிழில் எவ்வளவோ நல்ல நகைசசுவைப் படங்கள் வெளிவந்திருக்கின்றன. அவைகளெல்லாம் இப்பொழுது கூறப்படுவதைப போல் அசிங்கமான இரு பொருள்படும் வசனங்களால் வெற்றியடையவில்லே.

காதலிக்க நேரமல்லே, உத்தரவின்றி உள்ளேவா, மிஸியம்மா, பலே பாண்டியா, பாரதவிலாஸ், சபாஷ் மாப்பிள்ளே போன்ற பல படங்கள் நகைச்சுவை வசனங்களால் நல்ல முறையில் எடுக்கப்பட்டதால் வெற்றி பெற்றன. அவைகளில் இதுபோன்ற இரு பொருள்படும்வசனங்கள் இல்லே

இப்போது எல்லோரும் அசிங்கமாக வசனம் எழுதப்படுவதாகக் கூறுகிருர்கள். நல்லவேளேயாக அப்படிப்பட்ட வசனங்களேப் பேசி நடிக்கும் வாய்ப்பு இதுவரை எனக்கு ஏற்படவில்லே இனியும் ஏற்படாது என்று நம்புகிறேன்.

'அப்படி என்னதான் இருக்கிறது' என்று அந்த மாதிரிப் படங்களேப் பார்க்கலாமா என்று எனக்குத் தோன்றுகிறது.

இதைப்போல்தான் இரு பொருள்படும் ஆபாச நகைச்சுவை உரையாடல் உள்ள படங்களேப் பார்க்க மற்றவர்களும் செல்லுகிருர்கள் என்று கருதுகிறேன.

என்ன என்று பார்த்துவிட்டால் அப்புறம் அதில் உள்ள வேகம் எல்லோருக்குமே குறைந்துவிடும்.

தரமான படங்கள் தான் மக்களேக் கவரும். வலுவான கதைஇல்லாமல், மோசமான வசனங்களால் மட்டும் எந்தப் படமும் வெற்றியடையாது.

அடித்தளம் இல்லாமல் அடுக்கு மாளிகை எழுப்பினல் அதுசாதாரணக்காற்றிலேயே சரிந்து விழுந்துவிடும்.

இரு பொருள்படும் வசனங்கள் உள்ள படங்களும் இப்போதைய மோகத்தால் ஓரளவு ஓடலாம். அனல், அது தொடர்ந்து இருக்கும் என்று எதிர்பார்த்தால் ஏமாந்துபோக நேரிடும்.

# 45 நாள் இடைவெளிக்குப்பின் இணைந்த நட்சத்திர ஜோடி

சென்ற ஆண்டு தமிழ்த் திரைப்படங்களில் அதிகமாக ஒரு நட்சத்திர ஜோடி நடித்தது

கடந்த பல ஆண்டுகளாக பெரும்பாலான படங்களில் அவர்கள் இருவரும்தான் சேர்ந்து நடித்து வந்தனர்.

ஆனல் இல்—"என் வளர்ச்சிக்கு யாரும் காரணமில்லே. எனது திறமைதான் அதிக படங்களில் நடிக்கும் வாய்ப்பைத் தேடித் தந்தது." இப்படி அந்த நடிகை சொன்னதாக பரவலாகப் பேசிக் கொள்ளப்பட்டது.

### இந்தப் பூனே பால் குடிக்குமா?

"அவரோடு நடித்த படங்களேவிட மற்றவர்களோடு நடித்த படங்கள்தான் அதிக வெற்றியடைந்திருக்கின்றன" என்றுஇன்னும்.. இன்னும்... என்னென்னவோ கூறியதாக 'கிசுகிசுக்கப்பட்டன.

ஆனல், கதாநாயக நடிகர் வாயைத் திறக்கவே இல்லே.

'இந்தப் பூனேயும் பாலேக் குடிக்குமா' என்பது போல் சில பூனேகள் இருக்கும். ஆனல வீட்டில் உள்ள பால்மட்டுமல்ல, மோரும், வெண்ணெயும் கூட காணுமல் போய் விடும்.

இந்தக் கதாநாயக நடிகர் எப்படிப்பட்டவரோ—மொத்தத்தில் அழுத்தக்காரர்!

சமீபத்தில் புதிதாகஒப்பந்தமான படங்களிலெல்லாம் பழைய ஜோடி இல்லே.

வெண்ணிற ஆடை நிர்மலா, பத்மபபிரியா, ஸ்ரீபிரியா ஆகியோர் அந்தக் கதாநாயக நடிகரோடு நடிக்கின்றனர்.

இன்னுமா அவரை யாரென்று உங்களுக்குப் புரியவில்லே?

சாட்சாத் — ஜெய்சங்கர் தான்!

பழைய ஜோடியான ஜெயசித்ராவுடன் அண்மையில் அவர் இணேந்து நடித்த காட்சிகள் படமாக்கப்பட்டன.

45 நாட்கள் இடைவெளிக்குப் பின் பிரிந்தவர் கூடினல் எப்படி இருக்கும்?

திருத்தணி பிக்சர்சாரின் "பணக்காரப்பெண்" வெளிப்புறப் படப்பிடிப்பு சேலத்தில் பல்வேறு இடங்களில் நடைபெற்றது

சேலம் ரத்ன கார்டன் மற்றும் பல இடங்களில் 'ஜெய்' ஜோடி ஆடிபபாடிக் கும்மாளம் போட்டது. எல்லாம் படப்பிடிப்பில்தான்! இடை யிடையே உண்மைச் சம்பவங்களும் நடந்தன.

"என்னம்மா ராஜாத்தி
முன்கோபம் எங்கேயம்மா
அல்லிராணி வேஷமெல்லாம்
எங்கேயம்மா....?
கோழிக்கு பின்
சேவல் நின்ருல்சீரும்
பின் சேரும்
காதல் உண்டாகும்"

சேலம் ரத்ன கார்டனில் இந்தப பாடல் காட்சியில் ஜெய்சங்கர், ஜெயசித்ரா நடித்தனர்.

பாடல் வரிகள் பொருத்தமாக இருக்கின்றன அல்லவா?

ரத்ன தோட்டத்தின் உரிமையாளர் படக்குழுவினரை உபசரித்து திக்குமுக்காட வைத்துவிட்டார்.

மறுநாள்ஏற்காட்டில் படப்பிடிப்பு.

இசையமைப்பாளர் எம். எஸ். விஸ்வநாதன் விடுமுறையைகொண்டாட ஒருபங்களாவில் தங்கியிருந்தார். அந்த இடத்திற்கு அருகில் படப்பிடிப்பு நடந்தது. சிற்றுண்டி கொடுத்து அவர் உபசரித்தார்.

### புதிய படம் ஒப்பந்தம்

சென்ற ஆண்டும் வருடப் பிறப்பன்று அதே இடத்தில் அக்கரைப்பச்சைபடப்பிடிப்பு நடந்ததாகவும், ஜெய்சங்கர், ஜெய்சித்ரா இருவரும் கலந்து கொண்டதாகவும் கூறினுர்கள்.

அங்கு 'டுயட்'பாடல் ஒன்று படமாக்கும்போது வெய்யில் ஒளிந்து விளேயாடியது.

ஒப்பனேக்காக ஜெய்சங்கர் உட்கார்ந்திருந்தார். அப்போது தயாரிப்பாளர் துளசிராம், டைரக்டர் எஸ். பி. முத்துராமன், கதாசிரியர் பஞ்சு அருணுசலம் ஆகியோர் வந்து புதிய வண்ணப்படம் படம் ஒன்றுக்கு ஜெய்சங்கரிடம்முன்பணம்கொடுத்தனர்.

'விண்ணுக்கும் மண்ணுக்கும் ஒரு பாதையா?' என்ற பாடல்வரியை படமாக்கினர்.

அந்த வரிகள் படமாக்கப் படும்போது மழை வந்துவிட்டது. இரண்டு மூன்று முறை இதேபோல்நடந்தது உடனே "இந்த வரிகளே மட்டும் அப்புறம் படமாக்கலாம்; மற்ற பகுதிகளே எடுங்கள்" என்ருர் ஜெய்சங்கர்.

"நீங்கள் சரியாக மேக்கப் போட்டுக் கொண்டால் வெய்யில் கட்டாயம் வந்துவிடும்" என்ருர் ஜெய்சித்ரா குறுக்கிட்டு

### ஜெய்சங்கரிடம் ஜெயசித்ரா அடிவாங்கினர்

"இல்லே... ஒரு ஹீரோயினே கன்னத்தில் அடித்தால் பயந்து கொண்டு தன்னுலே வெய்யில் வரும்" என்ருர் ஜெய்சங்கர். (எத்தனே (45) நாள் ஆத்திரமோ?)

ஜெய் நெருங்கினுர்—ஜெய்சித்ரா விலகி ஓடினுர்.

"அவர் சொல்வது போல் கேளுங்கள்—வெய்யில் வருகிறதா பார்க்கலாம்" என்ருர் டைரக்டர் வி.ராஜேநதிரன் சமாதானமாக. (அடிவாங்கப் போவது அவரில்லேயே!)

"நீங்கள் மேக்கப் போட்டு வெய்யில் வருகிறதா என்று பார்க்கலாம். அப்படியும் வராவிட்டால் அடியுங்கள்" என்று நிபந்தனே கூறினுர் ஜெயசித்ரா.

ஜெய்சங்கர் சம்மதித்து மேக்கப போட்டுக்கொண்டார், மேகங்கள் திரண்டு வந்து சூரியனே மூடிக்கொண்டன; வெய்யில் வரவில்லே.

டைரக்டரும், தயாரிப்பாளரும் ஜெய சித்ராவைப் பார்த்தனர். இனி தப்புவதற்கு வழியில்லே—அவர் சம்மதித்தார்!

ஜெய்சங்கர் நெருங்கிவந்து வேகமாக கையை ஓங்கி (மனம் வருமா?) மெதுவாக ஜெயசித்ரா கன்னத்தின் தட்டினுர்.

என்ன ஆச்சர்யம்..? மேகக் கூட்டங்கள் விலகி ஓடி விட்டன,

ஜெய்சங்கரும், ஜெய்சித்ராவும்நடித்துமுடித்தனர்.

பகலில் ஜெய்சித்ராவுடன் கட்டிபபுரண்டு காதல்செய்து முடித்த ஜெய்சங்கர். மாலே 6 மணிக்கு மேல் மாடர்ன் தியேட்டரில் 'எங்களுக்கும் காதல் வரும்' படப்பிடிப்பில் பத்மப்பிரியாவை ஆரத் தழுவி உருளுவதற்குப் புறப்பட்டுவிட்டார்.

"ஹூ...ம்.. ஜெய்.. கொடுத்து வைத்தவர்..! வேளேக்கொரு கதாநாயகியுடன் ஹூ..கும்... கொண்டாட்டம் தான்!" அருகில் இருந்த ஒருவர் நீராவி எஞ்சின்போல் அநியாயமாகப்பெருமூச்சு விட்டார்.

திருத்தணி பிக்சர்சாரின் 'பணக்காரப் பெண்' படத்திற்கு துறையூர் கே மூர்த்தி கதை வசனம் எழுதுகிருர்.

கண்ணதாசன் பாடல்களுக்கு வி. குமார் இசையமைத்துள்ளார். வி ராஜேந்திரன் டைரக்ட் செய்கிருர்

—நாகை தருமன்

Printed by S.V.G. Sowrirajulu at the M.C.P.P.S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

சிலேகள் அல்ல—கமலஹாசனும், ஜெயசுதாவும்தான். (படம்; மேல்நாட்டு மருமகள்)]

# மேல்நாட்டுப் பெண்ணுடன் சிவகுமார் சல்லாபம்

மேல்நாட்டுப்பெண் ஒருவர் குளித்துவிட்டு தமிழ்நாட்டுப் பெண்ணேப்போல் கூந்தலே முடித்து, பூவைத்து, குங்குமப் பொட்டிட்டு பட்டுப் புடவை சரசரக்க பள்ளியறைக்குள் வருகிருள்.

சிவகுமார் தூக்கம் கலேந்து விழித்துப் பார்க்கிருர்,

அந்தப் பெண் காப்பியை நீட்டுகிருள். காப்பியை வாங்கியபடி அவளே அருகே இழுத்து அமர்த்திக் கொள்கிருர். கட்டிலில் பளிங்குச் சிலேபோல் பருவப் பெண் ஒருத்தியை உட்கார வைத்த பிறகு சும்மா இருக்க முடியுமா? மெல்ல நெருங்குகிருர். அந்தப் பெண்ணே விலகி ஓடுகிருள்.

சிவகுமார் துரத்தியபடி செல்கிருர். அந்தப் பெண் ஓடிச் சென்று ரேடியோவை முடுக்குகிருர்.

வானெலியில் 'சுப்ரபாதம்' இனிமையாகக் கேட்கிறது. அந்த மேல் நாட்டுப் பெண் அதைக் கேட்டு மெய்மறந்து நிற்கிருள்.

சிவகுமாருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லே. அந்தப் பெண்ணேயே இமையாமல் பார்த்தபடி நிற்கிருர். 'இவள் மேல் நாட்டுப் பெண்தானு' என்ற வியப்பு அவருக்கு.

இக்காட்சி சி. என். வி. மூவிசாரின் 'மேல் நாட்டு மருமகள்' வண்ணப்படத்தில் இடம் பெற்றுள்ளது.

மேல் நாட்டுப் பெண்ணுக சிவகுமாரின் மனேவியாக நடிப்பவர் குமாரி லாரென்ஸ். வெளிநாட்டைச் சேர்ந்த பெண் முதன் முறையாக முக்கிய வேடத்தில் கதாநாயகியாக முழுமையாக நடிப்பது இந்தப் படத்தில் தான்.

ஏ. பி. நாகராஜன் கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிருர்.

கமலஹாசன், ஜெயசுதா, மாஸ்டர் ரகு, கே. டி. சந்தானம், சோ, மனேரமா, கோபால கிருஷ்ணன் ஆகியோரும் நடிக்கின்றனர்.

குன்னக்குடி வைத்தியநாதன் இசையமைக்கிருர்.

## 'அவரே தான் இவரு இவரே தான் அவரு'

காதல் மன்னன் ஜெமினி கணேசன்தான், காதல் மன்னி வேடத்தில் காட்சியளிக்கிருர்.